12th February 1958] [Sri T. P. Srinivasavaradan]

I request that the fee concession should be extended up to the VI Form and we will find that the number of persons attracted to high schools will be more for the same reason.

I may particularly mention here, Sir, that the L.M.E.'s and L.E.E's. are not adequately paid. So, they drift to other jobs in the Railways. Thus there is difficulty in finding persons with the requisite qualifications. This position has to be considered. The Government must see that something is done so that these teachers may be retained in the schools. In the third, fourth and fifth years of the Second Five-Year Plan, the Government propose to introduce in hundreds of schools the bifurcated course. That means, in 1958–59, 1959–60 and 1960–61, three hundred schools will have the bifurcated course. I am afraid the Government have not got the necessary instructors. What about the instructors for the Agricultural course? At least for the Engineering course, we get for some months in the year L.C.Cs., L.E.Es. and L.M.Es. But, for the Agricultural course, I am definitely told by a number of institutions that they are unable to get instructors. So, the Government must be very careful before introducing this bifurcated course. The Government have the equipment and they also have the money to spend. But the Government must see that the money is properly utilized. 5 p.m.

Another thing is that the Government are giving a grant for four subjects. On what basis they choose the schools for the grant, I am unable to understand. I find that certain schools, which are well up, are given this grant. This should be given to schools that need such help. There are also schools which, though they may have something, on account of the expansion, require money. To such schools, the grant must be given. The Government give grants for libraries, for four subjects, for scientific equipment, for laboratories, etc. While giving the grant, they must see that the grants are fairly distributed and that they are given only to schools which are in need of such financial help.

The last thing that I wish to speak on is the training of teachers. We have been saying that the training of the teachers is an important matter. Whether you went to introduce basic education or some other kind of education, or if you want to effect any reorganization, then training institutions to train the teachers to adapt themselves to the new scheme are necessary. What do we find in the training institutions? We have got lecturers and tutors who have had no previous experience of teaching in any high school. You can take this from me. I am giving first-hand information. One passes his M.A. degree examination and goes straight to the Teachers' College, gets admitted to the B.T. course, and is posted as lecturer. I am not prepared to give the name of the college. But this has been my experience. Do the Government think that these people can do anything for the trainees in the Teachers' College? The trainees are there to learn the methods of teaching. But we have got raw men as lecturers. On what basis these men are recruited, I do not know. We find the Principal of an Arts College suddenly transferred to the Training College. He is the

Principal of a Training College. All along he had been the Principal of an Arts College. I should like to give one more instance. One who has been a Deputy Director of Public Instruction or a District Educational Officer is posted as the Principal of a training college. If the Government know all these, they will realize that proper men should be posted, that the trainees should get benefit and that the money should not be wasted.

With these words, Sir, I should like to close my speech. During the Budget discussion—as I said, unheard music is sweeter—we hope to get something from the Hon. the Minister for Finance and Education.

(Mr. Chairman in the Chair.)

* **Sri M. V. SUDARSANAM NAIDU :** கனம் தலைவர் அவர்களே, நமது கவர்னர் அவர்கள் தம்முடைய உரையில் முதலில் ஆரம்பிக்கும்போதே நம்முடைய நாட்டைப் போன்றே அவருடைய நாடாகிய அஸ்ஸாமும் டெல்லிக்கு வெகு தூரத்தில் இருப்பதாக எடுத்துச்சொல்லி, அதன் பயனாக அவர்களுக்கு என்ன என்ன குறைகள் இருந்தனவோ அவைகள் இங்கேயும் இருக்கலாம் என்று குறிப்பிட்டு, அவைகளை நீக்கி அகில இந்தியாவும் ஒன்றுபட்டு வாழ்வதற்கு சேவை செய்ய எல்லோரும் ஆய்த்தமாக இருக்க வேண்டும் என்கிற தொனியில் பல விஷயங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். நம்மைத் தம்முடன் ஒருங்கே பிணைத்துக்கொண்டு உரையை ஆரம்பிக்கிறார்கள். அதன் கருத்தே, கஷ்டமோ, சுகமோ ஒருவருக்கு மாத்திரம் இல்லை, கஷ்டப்பட்டாலும் சுகப்பட்டாலும் நாடு பூராவும் ஒன்றாக இணைந்து நின்று அதை அனுபவிக்க வேண்டும் என்பது ஆகும். நாட்டுப் பிரச்னைகளை நன்றாக உணர்ந்தவர், தேச ஐக்கியத்தில் நம்பிக்கையுடைய ஒரு தேச பக்தர் இன்றைக்கு இந்த ராஜ்ய கவர்னராகப் பணியாற்றும் நல்லதொரு வாய்ப்பு நமக்குக் கிடைத்திருப்பது பற்றி நாம் சந்தோஷம் கொள்ளவேண்டியிருக்கிறது.

ஆனால் ஒரு சாரார் அவர் நம் நாட்டுக்குத் தேவையில்லை என்று சொல்கிறார்கள். இதிலே மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டியவை பல இருக்கின்றன. அவர்கள் அப்படிச் சொல்வதற்கு முக்கிய காரணம் குறுகிய மனப்பான்மைதான். தமிழ் நாடு தனித்து இருக்க வேண்டும். மற்ற நாட்டவர்களுக்குக் குறிப்பாக வடநாட்டவர்களுடைய ஆதிபத்தியத்தின் கீழோ, ஆதிக்கத்தின் கீழோ இது இருக்கக் கூடாது என்கிற எண்ணத்திலே இப்படிப் பேசுகிறார்கள். நம் நாடு முன்னர் வெளிநாட்டாருக்கு அடிமைப்பட்டதன் காரணமே இந்தக் குறுகிய மனோபாவமும் தனித் தனியாக நம்முள் பல சண்டை சச்சரவுகள் இருந்ததும்தான். மகாத்மா காந்தீஜியின் தலைமையில் நாம் எல்லாம் ஒன்று சேர்ந்து கிட்டத்தட்ட நாற்பது வருஷங்களுக்கு மேலாக இந்தியா பூராவும் ஒன்றுபட்டு, எல்லோரும் இந்திய மக்கள் என்கிற உணர்வு உண்டாகி, சுதந்திரப் போராட்ட காலத்தில் இமயம் முதல் குமரி வரையில் உள்ள மக்கள் ஒரே குரலை எழுப்பினார்கள். அதன் காரணமாக நாம் விடுதலை அடைய முடிந்தது. தமிழ் நாட்டைத் தமிழர்களுக்கே வாங்கிக் கொடுத்துவிடுவதாகச் சொல்லிக் கொண்டு ஒரு இயக்கத்தை நடத்தும் தலைவர்களைப் போன்று அன்றைக்கு நமக்குத் தலைவர்கள் கிடைத்திருந்தால், நாம் சுதந்திரமே பெற்றிருக்க முடியாது. குறிப்பாக, நமது மகாத்மா காந்தி அவர்கள் 1919-ம் ௵ முதல் 1921-ம் ௵ வரை பல போராட்டங்களை நடத்தினார். சௌரி சௌரா என்னும் இடத்தில் ஒரு சிலர் அவருக்குத் தெரியாமல் செய்து விட்ட குற்றத்திற்காக அவர் அன்றைக்கு என்ன செய்தார்? நினைத்திருந்தால், அந்தக் குற்றத்திற்கும் எனக்கும் சம்பந்தம் கிடையாது என்று அவர் சொல்லியிருக்கலாம். ஆனால் அவர் அந்தக் குற்றங்களைச் செய்தவன் நான் என்று சொல்லி வேறு ஒரு சிலர் செய்துவிட்ட குற்றத்திற்குத் தம்மையே பொறுப்பாளியாக்கிக் கொண்டு அதற்குரிய தண்டனையையும் பெற்றார். அது ஒரு தலைவருக்கு அடையாளம். தமிழ் நாட்டைத்

12th February 1958] [Sri M. V. Sudarsanam Naidu]

தமிழர்களுக்கே வாங்கிக் கொடுக்கிறேன் என மக்களைத் தவறான வழியில் அழைத்துச் செல்கிற சில தலைவர்கள் இன்றைக்கு என்ன சொல்கிறார்கள் ? சென்னையில் நடந்துவிட்ட குற்றங்களுக்கு சர்க்கார்தான் பொறுப்பாளி என்பதாகக் குற்றம் சாட்டி தாங்கள் தப்பித்துக் கொள்ளும் உணர்ச்சி உடையவர்களாக இருக்கிறார்கள். இவர்களுக்கு எதில் அக்கறை என்பது இதிலிருந்தே நன்கு விளங்கும். தமிழ் மொழியின் வளர்ச்சியைப்பற்றியும், இந்தி மொழி வேண்டாம் என்றும் இவர்கள் வானளாவப் பேசுகின்றார்கள். அதில் அர்த்தம் இல்லை. ஏன் இல்லை ? இந்தி தேசீய பாஷையாக அமைய வேண்டுமென்று கிட்டத்தட்ட நாற்பது வருஷங்களாகவே சொல்லி வந்திருக்கிறோம். நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே செய்துவிட்ட அந்தத் தீர்மானத்தை ஏற்றுத்தான் இன்றுவரை செயல்பட்டு வந்திருக்கிறோம். காங்கிரஸ் சார்பாகவே இன்று ஆட்சியை நடத்துகிறோம். மக்கள் பெருவாரியான வோட்டுக்களால் காங்கிரஸ்காரர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். ஆகவே, காங்கிரஸ் கட்சியின் திட்ட முறைப்படி இன்றைக்கு இந்தி தேசீய பாஷையாகச் செய்யப்படும்போது, அதில் எந்த விதமான தப்போ தவறோ கிடையவே கிடையாது. அதிகப்பிரசங்கித்தனமாகவும் செய்யவில்லை. 5-10 p.m.

அது மட்டுமல்ல. இவர்கள் இந்தியே வேண்டாமென்றும் சொல்லவில்லை. இந்தியும், இந்தியோடு ஆங்கிலமும் ஒரு அளவு குறிப்பிட்ட காலம் வரையில் இருக்க வேண்டுமென்று சொல்கிறார்கள், வரவேற்கிறார்கள். ஆகவே வெகு காலமாகச் சொல்லப்பட்ட கொள்கைகளைத்தான் இன்றைக்கு சிறுகச் சிறுக அமுலுக்குக் கொண்டு வருகிறார்கள். ஆனால் ஒரு சிலர் அதை எதிர்க்கிறார்களே என்றால், ஏதோ ஒரு சில கொள்கையுடன் ஆசாபாசத்துடன் எதிர்க்கிறார்கள் என்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை.

அடுத்தபடியாக, ஆட்சியில் உள்ள பல குற்றங்களைக் கண்டுபிடித்து மக்களுக்கு எவ்வளவோ சௌகரியம் செய்ய வேண்டுமென்று நினைத்து பல விஷயங்களைச் சொல்கிறோம். முக்கியமாக எங்கள் ஜில்லாவிலே, சாத்தனூர் அணைக்கட்டைப்பற்றி ஒவ்வொரு இடத்திலும் பலவாறாகச் சொல்கிறார்கள். சாத்தனூர் அணைக்கட்டைப்பற்றி ஏற்கெனவே நமது முதல் அமைச்சர் அவர்களிடத்திலேயும் நமது மராமத்து அமைச்சர் அவர்களிடத்திலேயும் சென்ற மூன்று மாதங்களுக்கு முன்பே சொல்ல, அவர்கள் அதற்கு ஆவன செய்வதாகச் சொல்லியிருக்கின்றார்கள்.

மழை இல்லாத காரணத்தால், சிதம்பரம் தாலூகாவைத் தவிர, மற்றப் பகுதிகளின் பெரும்பாகத்தில் வறட்சி ஏற்பட்டுவிட்டது என்பதிலே உண்மை இருக்கிறது. அதை நாம் எடுத்துச் சொன்னோம். அவர்கள் சுற்றுப் பிரயாணம் வந்தபோது, அதை நேரில் நிதர்சனமாகக் கண்டார்கள். அதற்கு ஆவன செய்து வருகிறார்கள். ஆனால், அங்குள்ள மாற்றுக் கட்சிக்காரர்கள் மக்களிடம் பலவாறாகப் பரபரப்பை உண்டுபண்ணி ஒரு குழப்பத்தை உண்டுபண்ண வேண்டுமென்ற எண்ணத்தோடு பிரசாரம் செய்து வருகின்றார்கள் என்று நினைக்கும்போது, இம்மாதிரித்தான் ஹிந்தி முதலிய பல விஷயங்களைப்பற்றியும் சொல்லி, தேசத்திற்குத் தாங்கள் தான் பெரிய காரியத்தைச் சாதிப்பதாக மக்களை ஏமாற்றுவதற்கு இவர்கள் இந்த சூழ்ச்சியைச் செய்கிறார்கள் என்றுதான் என் போன்றவர்கள் நினைக்க வேண்டியிருக்கிறது. ஏன் நான் அப்படி நினைக்கிறேன் என்றால், சத்தியம், அகிம்சை, தர்மம் என்ற காந்தியினுடைய கொள்கைப்படி நாங்கள் இயக்கத்தைப் பரப்பினோம். மக்களிடத்திலே புகுந்தோம். மக்களிடம் எங்களுடைய உணர்ச்சியைக் காட்டினோம். அந்த வகையில் மக்களிடையே உணர்ச்சியை எழுப்பி, வெள்ளையரை விரட்டினோம். இந்தச் சரித்திரம் எல்லோருக்கும் தெரியும். இம்மாதிரிச் செய்து, சென்ற நாற்பது வருஷ காலமாக வெள்ளையரை விரட்டிச் சுதந்திரம் வாங்கும்போதுகூட, எங்களுக்கு வெள்ளையர் வேண்டுமென்று சொல்லிவந்த சொற்பக் கூட்டம் இன்றைக்கும் ஹிந்தி வேண்டாமென்று சொல்லுகிறதே தவிர, சுதந்திரம் வேண்டுமென்ற கூட்டம் இன்றைக்கு அவ்வாறு சொல்வதாகத் தெரியவில்லை. அன்றைக்கும் அதைச் செய்தார்கள். இன்றைக்கு நாடு ஒன்றுபட்டு வாழவேண்டுமென்றால், அவர்கள் நாட்டோடு கலந்து அவர்கள்

பங்கு கொண்டு, உடலோடு உடல் வாழ்ந்து நாமும் நம்முடைய லட்சியத்தைப் பரப்ப வேண்டுமென்று நினைக்கச் சந்தர்ப்பமும் சௌகரியமும் இருக்கிறது. சட்டமும் அப்படியே இருக்கிறது.

நூற்று நாற்பத்தி நான்கு செக்ஷன் உத்தரவை மீற வேண்டு மென்றால், இந்த நாட்டு மக்களுக்கு அதனால் என்ன ஏற்படும் என்று தெரியும். நூற்று நாற்பத்து நான்கு செக்ஷன் உத்தரவைப் பிர கடனப்படுத்தி விட்டார்கள் என்றால், யாரும் வெளியே வரமாட்டார்கள். எந்த இடத்தில் போனாலும் அடி வரும், உதை வரும், என்று எல்லா மக்களுக்கும் தெரியும். அந்த உணர்ச்சி வயப்பட்டு அந்தக் காலத்தில் நமது நாட்டுக்கு விடுதலை வந்தாக வேண்டுமென்ற பெரிய அவாவோடு கூட்டம் கூடுவார்கள், அடிபடுவார்கள். அது சகஜமாயிருந்து வந்தது. அகிம்சை முறையில் எல்லா இயக்கமும் நடந்தது. இன்றைக்கு 144 செக்ஷன் உத்தரவு பிறப்பிப்பது நூதனம் அல்ல. அதன் காரண மாக அடக்குமுறை ஏற்படும் என்று இன்றைக்கு அரசாங்கம் நினைத்தது தப்பல்ல. வெள்ளைக்காரர்கள் ஆட்சியில்தான் அப்படிச் செய்தார்கள் என்றால், நம்முடைய ஆட்சி நடக்க வேண்டாமா, முத்தம் இடுவார்களா? நெருப்பு என்றால் அது சுடத்தான் செய்யும். நெருப்புக்குப் பாரபட்சம் இடையாது. ஆட்சி நடக்க வேண்டுமென்றால், கட்டுதிட்டம் வேண்டும். பொறுப்புள்ள ஆட்சியில் இருப்பவர்கள் அவர்களுடைய கடமையை நிறை வேற்றக் கடமைப்பட்டவர்கள். ஆனால், அதன் காரணமாக ஜனங்களுக்குச் செய்யக்கூடிய ஏதோ மகத்தான காரியத்தைக் கெடுத்து தங்களைக் கைது செய்ததால் உண்டான கிளர்ச்சியின் காரணமாக இது ஏற்பட்டது என்று சொல்கிறார்கள். காங்கிரஸ் கட்சி நடத்திய காலத்தில் நிகழ்ந்த குற்றங் களுக்குக் காந்திஜீ, தாமே பொறுப்பாளி என்று சொல்லிக்கொண்டார்கள். ஆனால், தற்போது இயக்கத்தை நடத்தியவர்கள் தாங்கள் குற்றவாளிகள் அல்ல என்று சொல்கிறார்கள்.

இதையெல்லாம் நான் ஏன் எடுத்துச் சொல்கிறேன் என்றால், இந்திய நாட்டின் ஆட்சியைப்பற்றி வெளி நாட்டவர்கள் எல்லோரும் வெகுவாகப் புகழ்கின்றார்கள், பாராட்டுகின்றார்கள். ஆனால், நம் நாட்டில் இருக்கும் ஒரு சாரார் அதைப் பின்னப்படுத்தவேண்டுமென்று, உலகத் தலைவருக்கு அபகீர்த்தி உண்டுபண்ணவேண்டுமென்று, கெட்ட எண்ணத்தோடு இக் காரியங்களைச் செய்கிறார்கள் என்று என் போன்றவர்களுக்குத் தோன்று கிறதே தவிர வேறு ஒன்றும் இல்லை.

அது மட்டும் அல்ல. இன்னும் நமது நாட்டிலே சர்க்கார் எவ்வளவோ பெரிய திட்டங்களை வகுத்து, எவ்வளவோ பெரிய காரியங்களைச் செய்து வருகிறார்கள். ஆங்காங்கு இன்றைக்குக்கூட ஏதோ கேள்விப்படுகிறேன். எங்கு பார்த்தாலும் சிறு சேமிப்புத் திட்டத்தினால் தென்னாற்காடு ஜில்லா விலே ஒரே குழப்பமாகவும் ஒரே கூச்சலாகவும் இருக்கிறதென்று சில பேர் கள் பேசுவதாகச் சொல்கிறார்கள். நான் கேட்டவரையில் சொல்கிறேன்— ஜனங்களிடத்திலே குழப்பம் இல்லை. விஷயங்களை அவர்களுக்கு எடுத்துத் தெளிவுபடுத்தும்போது, நம்முடைய திட்டத்தைச் சந்தோஷமாக வரவேற்று, அதற்கு எல்லோரும் உதவத் தயாராயிருக்கிறார்கள். ஒரு சிலர் துஷ்பிரசாரம் செய்து, துர் எண்ணத்தோடு உணவு உற்பத்தியைப் பெருக் காமல் இருந்து நாட்டுக்குக் கெடுதலை உண்டுபண்ணவேண்டுமென்று சில காரியங்களைச் செய்கிறார்கள். அவர்களுடைய நோக்கத்தை மக்கள் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இவர்களெல்லோரும் சேர்ந்து ஒரு கெடுதலை ஆட்சியாளர்களுக்கு உண்டுபண்ண வேண்டுமென்றால், நடக்காத காரியம் என்று சொல்லி, மேலும் ஒரு சின்ன விஷயத்தைச் சொல்லி என்னுடைய உரையை முடித்துக்கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். ஏனென்றால் நமது தலைவர் அவர்களும் பார்க்கிறார்கள்.

**Mr. CHAIRMAN** : ' டைம் ' இருக்கிறது.

* **Sri M. V. SUDARSANAM NAIDU**: அரசாங்கம் ஜீப்களையும் லாரிகளை யும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள், பலப்பல இலாக்காக்களிலே. உத்தியோ கஸ்தர்கள் அவைகளுக்குக் கட்டுதிட்டமில்லாது எண்ணெய் வாங்குகிறார்கள்,

12th February 1958] [Sri M. V. Sudarsanam Naidu]

'அதை எங்கே கொடுக்கிறார்கள்?' என்ற எண்ணம் ஆங்காங்கே பரவிக் கொண்டிருக்கிறது என்பது நமக்குத் தெரிகிறது. அதை நமது அரசாங்கம் கொஞ்சம் கட்டுப்படுத்தி, போதுமானபடி எண்ணெய் செலவினங்களைக் குறைக்கக் கட்டுதிட்டங்களை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனக்குக் கொடுத்த இந்த அவகாசத்திற்காகத் தலைவர் அவர்களுக்கு நன்றி செலுத்திக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

*Sri M. ETHIRAJALU : அவைத் தலைவர் அவர்களே, இந்தச் சென்னை ராஜ்யத்தில் கவர்னர் பதவி ஏற்று, கூட்டுக் கூட்டத்திலே நமது ராஜ்யத்தின் நலனைப்பற்றி அவர் செய்த பிரசங்கத்தை நான் முழு மனதுடன் வரவேற்று வந்தனம் செலுத்திக்கொண்டு, அதன் பேரில் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

அவருடைய பிரசங்கம் நம்மையெல்லாம் உணர்ச்சிவசப்படச் செய்திருக்கிறதென்பதை யாரும் மறுக்க முடியாது. ஏனென்றால், "ஆயிரம் ஆயிரம் மைல்களுக்கப்பாலிருந்து பிற்பட்ட நாட்டைச் சேர்ந்த அஸ்ஸாமிலிருந்து நான் இங்கு வந்திருக்கிறேன்; அங்கு ஏற்பட்ட கஷ்டங்களையெல்லாம் பல இன்னல்களுக்கிடையே தீர்த்துவைக்க முயன்றிருக்கிறேன்; அந்த அனுபவத்திலிருந்து சென்னை ராஜ்யத்தைப் பார்க்கும்போது, பிற்பட்ட பொருளாதார நிலையில் குன்றியிருக்கும் சென்னை ராஜ்யத்தை உன்னத நிலைக்குக் கொண்டு வரவேண்டுமானால், மொழி வெறி இன்றி, மாகாண வெறி இன்றி, கட்சி வெறி இன்றி, தேசிய ஒற்றுமை உணர்ச்சியுடன் என்னோடு நீங்கள் தோளோடு தோள் நின்று ஒத்துழைப்பை கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டதைப் பார்க்கும்போது, யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது. அந்த வேண்டுகோளை சிந்திக்காமல் நம் ராஜ்யத்தில் கட்சி வெறி இருக்கிறதே என்று பார்த்து நாம் கவலைப்பட வேண்டியிருக்கிறது, மொழி வெறி இருக்கிறதே என்று பார்த்து மனம் குன்ற வேண்டியிருக்கிறது. இந்த நிலையிலே அவர்களுடைய பரந்த மனப்பான்மையைப் பார்க்கும்போது, அறிவின் களஞ்சியங்கள், சிகரங்கள், இன்னும் மற்றுமுள்ள படித்த மேதைகள் எல்லாம் அவருக்கு ஒத்துழைப்பைக் கொடுக்காமல் அவருக்கு வெறுப்பைக் காட்டுவது என்றால், அது உண்மையிலேயே இந்த அரசாங்கத்திற்குச் செய்யும் துரோகம் மட்டும் அல்ல, இந்த நாட்டிலே இருக்கின்ற பொது மக்களுக்குச் செய்யும் துரோகம் என்பதை நாம் எல்லோரும் உணருகிறோம். 5-20 p.m.

எனக்கு முன்பு பேசிய ஒரு கனம் அங்கத்தினர், டாக்டர் ஸ்ரீனிவாசன் குறிப்பிட்டார். பிரதம மந்திரி அவர்கள் சென்னைக்கு வந்தபோது நடந்த சம்பவத்தைப்பற்றிக் குறிப்பிடுவதற்கு இந்தப் பிரசங்கத்தில் இடம் இருக்கிறதா என்று அவர் கேட்டார். ஆனால் ஏன் பேசக்கூடாது என்று எனக்குத் தெரியவில்லை. எல்லாம் தெரிந்த அறிஞருக்குச் சொல்லத் தேவையில்லை. தென்னாடு தேய்கிறது, வடநாடு வளர்கிறது என்று சொல்கிறார்கள். தென்னாடு வளரவேண்டும் என்பதற்காகத்தான் 70 கோடி ரூபாயைவடக்கே இருக்கும் சர்க்கார் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தில் கொண்டுவந்து கொட்டியிருக்கிறார்கள். சென்னைக்கு இந்தியா தேச சர்க்கார் செய்து வருகிற நன்மைகளை எல்லாம் மறந்து தென்னகம் தேய்கிறது என்பதாகச் சொல்கிற வார்த்தைகளில் எவ்விதமான அர்த்தமும் இருப்பதாகத் தெரியவில்லை. எடுத்துக்காட்டாக தென்னகத்தின் நன்மைக்காகப் பல காரியங்களைச் செய்ய முன்வந்திருக்கிறேன் என்பதாக மக்களுடைய உள்ளத்தை ஊக்குவிக்க உற்சாக உணர்ச்சி ஓங்க 90 தொழில்களைக் கொண்ட ஸ்தாபனத்தை 70 லட்ச ரூபாய் செலவில் ஏற்படுத்தப்பட்ட தொழில் ஸ்தாபனம் ஒன்றைத் திறந்து வைக்க பல மைல்களுக்கு அப்பால் இருந்து விருப்போடு, அன்போடு ஓடோடி வருகின்ற காலத்தில், அவருக்கு அளித்த ஓர் மரியாதையைக் கண்டு மனித உள்ளம் படைத்த ஒவ்வொருவரும் மனம் கலங்காமல் இருக்க முடியாது. நம் தேசத்து மக்கள் எல்லோராலும் போற்றப்படுகிற இந்தியப் பிரதமராக மட்டும் அவர் இல்லை. உலகத்து மக்கள் எல்லோராலும் இந்தியாவின் முடிசூடா மன்னர் என்று போற்றப்படுகிற உத்தமருக்கு இந்திய நாட்டு மக்கள்

[Sri M. Ethirajalu] [12th February 1958

அதுவும் தமிழ் நாட்டு மக்கள், காட்டிய ஒருவித மரியாதையால் சரித்திரத்திற்கே ஒரு களங்கம் ஏற்படுத்திவிட்டார்கள். இதனுல் அவரது பெருமைக்குக் கெடுதிவரவில்லை, தமிழ் நாட்டின் நற் பெயருக்கே ஓர் இழுக்கு உண்டாகிவிட்டது. உலக அரங்கில் இன்றைக்கு நம்மைப்பற்றி என்ன நினைத்துக் கொண்டிருப்பார்கள் என்று எண்ணி வெட்கப்படவேண்டிய நிலையில் நாம் இருக்கிறேம். இன்றைக்கு நம்முடைய மதிப்பிற்குரிய பிரதம மந்திரி அவர்கள் இங்கே வந்திருந்தபோது, அவர் வடக்கத்தியர் என்று சொல்லி, மிகக் குறுகிய மனேபாவத்தோடு அவருக்குக் கருப்புக் கொடி காட்டி நம் தோழர்கள் கிளர்ச்சி செய்திருக்கிறுர்களே, இதன் விளைவு என்ன ஆகும், தென்னுட்டவர் என்று சொல்லி வடக்கே வாழும் தமிழர்களுக்கு அங்கே இருக்கிறவர்கள் அவமானம் இழைக்க ஆரம்பித்துவிட்டால், பம்பாய், கல்கத்தா, டெல்லி என்று இமயம் முதல் குமரி வரை வாழ்ந்து கொண்டிருக்கிற தமிழர்களுடைய கதியெல்லாம் என்ன ஆவது என்று யோசித்துப் பார்த்தார்களா ? தோளோடு தோள் சேர்ந்து நின்று, தமிழர், கன்னடியர், மலையாளி, தெலுங்கர், வடக்கத்தியர் என்கிற பாகுபாட்டு உணர்ச்சியை எல்லாம் நீக்கி ஒரு துளி ரத்தம் கூடச் சிந்தாமல் சுதந்திர இந்தியாவைப் பெற்றிருக்கும் நாம் இன்றைக்கு இந்தப் பிரிவினை மனப்பான்மை நாட்டில் மறுபடியும் வளர்வதற்கு இடம் கொடுத்தால், இதன் விளைவு என்ன ஆவது என்று யோசித்துப் பார்க்கவேண்டாமா ? இந்த நாட்டின் எதிர்காலம் என்ன ஆகும் என்று கேட்கிறேன். இதைச் சிந்தித்துப் பார்க்க நேரம் இல்லையா ? அன்றைக்கு அவருக்குக் கருப்புக் கொடி காட்டப் போவதாகச் சொல்லிக்கொண்டு எப்படிப்பட்ட காரியங்கள் எல்லாம் நடந்திருக்கின்றன ? பொது மக்களிடமிருந்து வாங்கிய பணத்தைக்கொண்டு, பொது மக்களுடைய சொத்தாக இருக்கிற எத்தனை பஸ்கள் நாசமாகியிருக்கின்றன ? இதனுல் யாருக்கு நஷ்டம் ? இப்படிப்பட்ட அராஜகச் செயல்களைச் செய்வதற்குத் தூண்டியவர்கள் இன்றைக்குத் தங்களுக்கு எவ்விதப் பொறுப்பும் இல்லையென்று தட்டிக் கழித்துக் கொண்டால் நாட்டினருக்கு உண்மை தெரியாதா ? இப்படிப்பட்ட வகையில் பொது மக்கள் சொத்திற்கு நஷ்டத்தைச் செய்பவர்களுடைய சொத்துக்களை நஷ்ட ஈடாகப் பறிமுதல் செய்துவிடவேண்டும் என்கிற சட்டம் இருக்குமானுல், இப்படிக் கும்பலோடு கோவிந்தா என்கிற முறையில் காரியங்கள் நடைபெற முடியுமா ? இப்படிப்பட்ட செயல்களை முளையிலேயே கிள்ளி எரிவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்காதிருந்தால், நாட்டில் இனி தனிப்பட்டவர்களுடைய சொத்துக்கும் பொதுமக்கள் சொத்திற்கும் எவ்விதமான பாதுகாப்பும் இராது என்று நிச்சயமாகச் சொல்வேன். உடனடியாக இதற்கு ஒரு சட்டத்தை சர்க்கார் கொண்டுவந்தாக வேண்டும். இல்லையேல், இனி தாழ்த்தப்பட்டவர்கள், பிற்போக்கானவர்கள் யாராய் இருந்தாலும், இந்த ராஜ்யத்தில் வாழ்வதற்கு இடம் கிடையாது என்று சொல்ல முடியும். என்னை யாராவது தாக்கினுல் எனக்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது ? போலீசார் இருக்கிறுர்கள் என்றுல், தாக்கட்டும், அப்புறம் நடவடிக்கை எடுக்கத்தான் சட்டம் இருக்கிறது என்பார்கள். இதைச் சொல்லி பொது மக்களைப் பாதுகாக்க சட்டமில்லாமல் இருத்தல் இனி முடியாது. ஜனவரி 6-ந் தேதியன்று என்ன நடந்தது ? நான் மண்ணடி வழியாகப் போகும் போது அராஜகக் கூட்டத்தார் போட்ட கூச்சலைக் கண்டு பொது மக்கள் பயந்தார்கள், ஓடினுர்கள், கடைக்காரார்கள் விளக்கை அணைத்தார்கள். வீட்டின் கதவுகள் எல்லாம் சாத்தப்பட்டன. பொது மக்கள் நடமாட முடியவில்லை.

5-30 p.m. அமளி உச்ச நிலை அடைந்தது. சுதந்திரம் பெற்றது இதற்காகத்தான ? பொது மக்களுக்கு ஏதாவது பாதுகாப்பு உண்டாயென்று கேட்கிறேன். பாதுகாப்பு அளிப்பதற்கு இதுவரையிலும் ஒரு சட்டம் இல்லையென்றுலும், உடனடியாக ஒரு சட்டத்தைக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தமிழ் நாடு கேட்கிறுர்கள் சிலர். இந்த நாட்டின் சுதந்திர இயக்கத்திற்காக ஒரு துளி ரத்தம் கூடச் சிந்தாமல் வெள்ளையர்களை இந்தியாவிலிருந்து விரட்டுவதற்குத் துணைபுரியாதவர்களெல்லாம் இன்றைக்குத் ' தமிழ் நாடு " வேண்டுமென்று குழப்பம் விளைவிக்கிறுர்கள். எல்லோரும் நம்மைவிட்டுப் பிரிந்து சென்றுவிட்ட பிறகு இதற்குத் தமிழ்நாடு என்று சொல்லாமல் என்ன நாடு என்று கேட்கிறேன். தமிழ் நாடு என்றுல் திருச்சி, மதுரையில் வாழ்பவர்கள் என்று சொல்கிறுர்கள். பின்னர் சேர, சோழ, பாண்டிய நாடு என்று ஒவ்வொருவரும் ஒரு நாடு கேட்க மாட்டார்

12th February 1958] [Sri M. Ethirajalu]

களா என்று நாம் சிந்திக்க வேண்டும். ஒவ்வொருவரும் நாடு, நாடு என்று கேட்டுக்கொண்டே போனுல், இதற்கு எங்கே முடிவு இருக்கிறது ? எப்படி நாம் ஒற்றுமையாக வாழ முடியும் ?

தமிழ் நாடு என்று எந்தச் சரித்திரத்தில் இருக்கிறது ? தமிழ்நாடு கேட்கின்றவர்களைப் பார்க்கும்போது, நமக்கெல்லாம் விந்தையாக இருக்கிறது. இதை வைத்தா நாம் போராட்டத்தை நடத்தவேண்டும். சுதந்திரம் கிடைத்துப் பத்து ஆண்டுகள் ஆகியும் இன்னும் அரிசி விலை குறையவில்லை என்று போராட்டம் நடத்தினுல், அதை வரவேற்கலாம். இந்த நாட்டிலே வேலையில்லாத் திண்டாட்டம் நீடிக்கிறது என்று போராட்டம் நடத்தினுல், நிச்சயமாக அவர்கள் கடமையை உணர்ந்தவர்கள் என்று நினைக்கலாம். அதையெல்லாம் விட்டுவிட்டார்கள். ஏதோ நான்சென்ஸ் என்று சொன்னுர்களாம், எங்கேயோ சொன்னுர்களாம். அதற்காக ஒரு வெறுப்பை ஏற்படுத்திக்கொண்டு, சட்டசபைக்கு வந்து ஒரு வருஷமாக ஒன்றும் கிளர்ச்சியே இல்லையே என்பதற்காக ஒரு கிளர்ச்சியைச் செய்வோம் என்று, மக்கள் நம்பக் கூடாத நிலையில் ஒரு போராட்டம் நடத்துகிறது என்ருல், நான் உண்மையிலேயே பயப்படுகிறேன். ஏன் என்ருல், மிகப் பின் தங்கிய எண்ணிக்கையில் குறைந்த சமுதாயங்களெல்லாம், இந்தக் குழப்பத்தைப் பார்த்து நமக்கெல்லாம் என்ன பாதுகாப்பு இருக்கிறதென்று நடுநடுங்குகிருர்கள். ஆகவே, இம்மாதிரிக் குழப்பம் நீடித்துக் கொண்டிருக்கக் கூடாதென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கான சட்டத்தை உடனடியாக இயற்றவேண்டும். அப்படி இயற்றினுல் தான் மக்கள் இந்த சுதந்திர நாட்டிலே நல் வாழ்வு, சுக வாழ்வு வாழ முடியும் என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்கள் விஷயமாக நான் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். எனது ஜில்லாவில் மொத்தமாகப் பார்க்கும் போதுகூட, அவர்களுக்கு எத்தனையோ நன்மைகள் செய்திருக்கிருேம். கல்வி, உத்தியோகம் முதலிய வகைகளில் அவர்களுக்கு நன்மை செய்திருக்கிருேம். இருந்தாலும், நாங்கள் மக்களுடைய குறைகளை இங்கே எடுத்துச் சொல்லும்போது, அவைகளைச் சர்க்கார் அதிகாரிகள் கவனித்து நாங்கள் பேசுவது உண்மையா அல்லவா என்று சிந்தித்துப் பார்த்து, நாங்கள் பேசுவதை "நோட்ஸ்" எடுத்துக்கொண்டு, அங்கே இருக்கும் ஜில்லா அதிகாரிகளுக்கு அனுப்பி, அங்கிருக்கும் குறைகளைப் போக்குவதற்கு ஆவன செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

"எங்கள் ஜில்லாவிலே எத்தனையோ ஹரிஜன மக்கள் இன்னும் குடியிருப்புக்கு இடம் இல்லாமல் இருக்கிருர்கள்," என்று நான் ஆளும் கட்சியைச் சார்ந்தவன் என்ற முறையிலும் சொல்கிறேன். ஹரிஜனங்களுக்கு வீடு இல்லாமற் போனுலும் பரவாயில்லை. அவர்களுடைய செத்த பிணத்தைப் புதைப்பதற்குக்கூட இடம் இல்லாமல் தவிக்கிருர்கள். இதை எத்தனையோ தடவை நான் சொல்லியிருக்கிறேன். உடனடியாகக் கலெக்டருக்கு ஒரு உத்தரவு அனுப்பி, அந்த ஜில்லாவில் சேரிகள் உள்ள பகுதிகளில் ஹரிஜனங்களுக்கு என்று பிணங்கள் புதைக்க எங்கெங்கே இடம் இல்லை என்று கேட்டறிந்து, அங்கெல்லாம் நிலம் ஒதுக்கிக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். நான் அதிகமாக அதைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. அநேக சேரிகளில் கிணறுகள்கூட இன்றும் கிடையாது. சேரிவாசிகள் யாரை சந்தித்துக் கேட்பதென்று கூடத் தெரியாத நிலையில் இருக்கிற காரணத்தால், இன்றைக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது என்று நான் சொல்ல ஆசைப் படுகிறேன்.

மேலும் பருவ மழை நன்ருக இருந்ததால் நல்ல விளைச்சல் ஏற்பட்டிருக்கிறது என்று கவர்னர் அவர்கள் தம்முடைய உரையில் குறிப்பிட்டிருக்கிருர்கள். ஆனுல், எங்கள் பகுதியில், அதாவது தென்னுற்காடு ஜில்லாவைப் பொறுத்தவரையில், மழை சரியாகப் பெய்யாத காரணத்தால் பல இடங்களில் தண்ணீர் இல்லாமல் விவசாயம் கெட்டுப் போய்விட்டது. அதனுல், இன்றைக்கு மக்கள் வரி கொடுக்க முடியாமல் கலங்கிக் கொண்டிருக்கிருர்கள். குறிப்பாக, கள்ளக்குறிச்சி தாலுகா, விழுப்புரம் தாலுகா கஞ்சனுர், விழுப்புரம், திருக்கோயிலூர் முதலிய பகுதிகளில் உள்ள

[Sri M. Ethirajalu] [12th February 1958

மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்த இடங்களைப் பரிசீலித்து வரி வஜா செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். நான் சொல்வது சரியா தவறா என்று பார்க்கவேண்டுமென்றால், சொல்கிற தேதியிலிருந்து தாக்கீது ஜில்லாக் கலெக்டருக்கு அனுப்பி, அவர்களைச் சோதித்துப் பார்க்கச் சொல்லி, வரி வஜாச் செய்ய வேண்டுமென்று மீண்டும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

சிறு சேமிப்புத் திட்டத்திற்கு மக்கள் நன்றாக ஒத்துழைப்புக் கொடுத்து வருகிறார்கள். ஏழை மக்களும் தங்களுடைய பங்கைக் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். இந்த நிலையிலே விவசாயிகள் நமக்குக் கொடுக்கவேண்டிய கடனை ஒரு சிறிது காலம் கொடுத்து, கடனை வசூலிப்பதற்குக் காலத்தை ஒத்திப்போடவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மின்சார விஷயத்தை எடுத்துக்கொண்டால், நமது சென்னை ராஜ்யத்திலே ஏறக்குறைய ஐயாயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும், மேலும் ஆயிரம் கிராமங்களுக்குத் துரிதமாக கொடுக்கப் போகிறார்கள் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அதை நான் வரவேற்கிறேன். ஆனால், மற்றப் பகுதிகளைப் பார்க்கும்போது 400, 500 கிராமங்கள் முதல் ஆயிரம் கிராமங்கள் வரை மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அப்படியிருந்தும், தென்னாற்காடு ஜில்லாவில் 150 கிராமங்களில்தான் இதுவரை மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதற்குக் கனம் அமைச்சர் அவர்கள் தென்னாற்காடு ஜில்லாவுக்கு முதல் சலுகை கொடுக்க ஏற்பாடு செய்திருப்பதாகச் சொன்னார்கள். அதை நான் வரவேற்கிறேன். ஆனால் மற்ற ஜில்லாக்களுக்குக் கொடுப்பதைப்போல இந்த ஜில்லாவிற்கு சமமாகக் கொடுத்தால் மட்டும் போதாது. மற்ற ஜில்லாக்களுக்குக் கொடுப்பதைவிட தென்னாற்காடு ஜில்லாவுக்கு அதிக மின்சாரச் சலுகை கொடுக்க வேண்டுமென்று நான் மீண்டும் அமைச்சர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்தால்தான் விவசாயம் நன்றாக நடக்கும் என்றும் தெரிவித்துக்கொள்கிறேன்.

முனிசிபல் நகரத்திலேகூட என் ஜில்லாவில் மின்சாரம் இதுவரை கொடுக்கப்படவில்லை என்பதை அமைச்சர் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். அடுத்தபடியாக, குளம், குட்டைகள் போன்ற சிறிய நீர்ப்பாசன வசதிகள் செய்து கொடுப்பதைத் துரிதப்படுத்த வேண்டுமென்று கவர்னர் பெருமான் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதுவரை நாம் பெரிய பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களையெல்லாம் நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுத்துக்கொண்டு, அதற்கு வேண்டிய எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொண்டு வந்தோம். ஆனால், இன்றைக்கு உணவு சரியாக உற்பத்தி ஆகவில்லையென்றால், கிராமங்களிலே இருக்கும் குளங்கள் போன்ற சிறுசிறு நீர்ப்பாசனங்கள் விஷயத்தில் நாம் போதுமான அக்கறை காட்டாத காரணத்தால்தான் இந்தக் குறை ஏற்பட்டிருக்கிறதென்பதை யாரும் மறுக்க முடியாது. நான் பல கிராமங்களுக்குச் சென்று பார்த்திருக்கிறேன். ஏரிக்கரைகள் எத்தனையோ ஆண்டுகளாகச் சீர்திருத்தம் செய்யப்படாமல் இருக்கின்றன. மைனர் இரிகேஷன் அதிகாரிகளைக் கேட்டால், நாங்கள் நடவடிக்கை எடுத்துக்கொண்டுதான் இருக்கிறோம் என்று சொல்கிறார்கள். ஒரு மீட்டிங் சமயம் கலெக்டர் அவர்கள் மைனர் இரிகேஷன் உத்தியோகஸ்தர்களை நேரில் சந்தித்துக் கேட்டபோது, 15 நாட்களில் செய்யவேண்டும், 2 நாள் கூடக் கொடுக்க முடியாது" என்று அன்றைக்குக் கட்டாயப்படுத்திச் சொன்னார்கள். இவர் எவ்வளவு தூரம் அக்கறை எடுத்துக்கொண்டிருக்கிறார் என்பதைப் பார்க்கும்போது, அதுதான் இங்கே விவசாயத்திலே அதிகம் பெருக்கம் இல்லாத காரணம் என்று நான் சொல்ல முடியும். அதற்காகத்தான் சிலர் "மைனர் இரிகேஷனை பி. டபிள்யூ. டி. யோடு சேர்த்துவிட்டால் நல்லது" என்று சொன்னார்கள். ஆனால், அதை சர்க்காருடைய முடிவுக்கு விட்டுவிடுகிறேன். அதற்குள் ஒரு தனி உத்தரவு போடவேண்டும். குளம், குட்டைகள், ஏரிகள் முதலிய சிறு நீர்ப்பாசனங்களை ஆங்காங்கு துரிதப்படுத்தி வேலை செய்து வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டுமென்று சொன்னாலொழிய, நாம் உணவு உற்பத்தியைப் பெரும் அளவுக்குப் பெருக்க முடியாது என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

12th February 1958] [Sri M. Ethirajalu]

தேசிய அபிவிருத்தித் திட்டத்தின்கீழ், முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே பல ரோடுகளைப் போட்டோம், கிணறுகளை வெட்டினோம், ஆஸ்பத்திரிகளை ஏற்படுத்தினோம், பள்ளிக்கூடங்களைக் கட்டினோம். ஆனால், கட்டிய கட்டிடங்களின் நிலைமையைக் கவனித்தால் பெரும்பாலான கட்டிடங்களில் வீரல் ஏற்பட்டிருக்கின்றனவா, ரோடுகள் எல்லாம் கல் வெளியிலே தெரியாமல் சரியான சமனாக இருக்கின்றனவா என்பதை யெல்லாம் கவனிக்க ஒரு கமிட்டி நியமிக்கவேண்டும். இந்தக் கமிட்டியினர் வேலை செய்யும்போது, வீரல் உள்ள ஒவ்வொரு கட்டிடத்திற்கும் ரோடுக்கும் யார் கண்டிராக்டர், யார் என்ஜினியர் என்றெல்லாம் கண்டு பிடித்து, நஷ்டம் ஏற்பட்டதிற்குக் காரணமாயிருந்தவர்களைக் கண்டு பிடித்து தொகையை வசூலிக்க ஏற்பாடு செய்யவேண்டும். எந்த எந்தக் கட்டிடங்கள் நல்ல நிலையில் இல்லையோ அந்தக் கட்டிடங்களை மேற்பார்வையிட்ட இன்ஜினியரிடமிருந்தோ, கண்டிராக்டரிடமிருந்தோ பணத்தை வசூலிக்கச் செய்து, மீண்டும் வேலையைச் செய்துகொடுக்க வகை செய்யவேண்டும். ஒரு இன்ஜினியரை இப்படிச் செய்தால்தான், எதிர் காலத்தில் நாம் போடும் திட்டங்கள் பொறுப்புடனே, நேர்மையுடனே, நீதியுடனே நிறைவேற்றப்படும். பொது மக்களுக்காகச் செய்யும் திட்டங்களில் நமக்கும் முழுப் பொறுப்பு உண்டு என்று சர்க்கார் உத்தியோகஸ்தரும், கண்டிராக்டரும், இன்ஜினியரும் உணரும் வகையில் நமது அமைச்சர் அவர்கள் காலத்திலே ஒரு கமிட்டியை உடனடியாக ஏற்படுத்தி ஆவன செய்ய வேண்டும். அந்தக் கமிட்டி சர்க்கார் சார்பாக போடப்பட்ட ரோடுகளையும், பள்ளிக்கூடங்களையும், ஆஸ்பத்திரிகளையும் பார்வையிடவேண்டும். மரங்கள் என்ன என்ன போட்டுக் கட்டப்பட்டு இருக்கிறது என்பதையும் பார்க்க வேண்டும் என்று நான் அமைச்சர் முன்னிலையில் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கடைசியாக, ஒன்றே ஒன்றைச் சொல்லிவிட்டு நான் முடித்துக்கொள்கிறேன். ரெயில் டிக்கெட்டின் விலை ஏற்றத்தின் காரணமாக பஸ் பிரயாணிகள் அதிகமாகிவிட்டார்கள். கிராமங்களில் இருந்து நகரங்களுக்கு வரும் வேலைகள் கிராம மக்களுக்கு அதிகமாகி இருக்கின்றன. அதன் காரணமாக மக்கள் கிராமங்களிலிருந்து பஸ் ஏறி ஓடிவருகிறார்கள். மணிக்கணக்கில் பஸ் கிடைக்காமல் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே பஸ்களுடைய எண்ணிக்கையை சர்க்கார் அதிக படுத்தவேண்டும். அதிகமான பேர்களுக்கு பஸ் பர்மிட் கொடுத்து மொபஸல் லைன்களில் அதிகமான பஸ்கள் கிராமங்களுக்கு ஓடும்படியாகச் செய்யவேண்டும். பொருளாதார வகையில் மிகவும் பிற்போக்காக இருக்கிற ஹரிஜனங்களுக்குத்தான் பஸ் பர்மிட் கொடுக்கட்டுமே. யாராவது ஒரு ஹரிஜனனுக்குக் கொடுத்திருக்கிறார்களா என்று கேட்கிறேன். அதே போல பிற்பட்ட இனத்தவர்களுக்கும் பஸ் பர்மிட்டுகள் கொடுக்கலாம். இந்த நிலையில் கிராம மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதனால் அதிகமான பஸ்கள் விடுவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பிற்பட்ட இனத்தவர்களுக்குப் பர்மிட் கொடுத்தால், அவர்கள் பணத்திற்கு எங்கே போவார்கள் என்று கேட்கலாம். எப்படியாவது அவர்கள் பணம் தேடிக் கொள்வார்கள். அதைப்பற்றி நாம் கவலைப்படவேண்டாம் என்றுதான் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பர்மிட் ஒருவர் பேரில் இருக்கிறது, பஸ் ஒருவர் விடுகிறார் என்பதாகப் பல புகார்கள் வருவதாகச் சொல்கிறார்கள். ஒருவருக்குக் கொடுத்தால் அந்த ஒருவர் பேரிலேயேதான் பஸ் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அதை ரத்து செய்துவிடலாம். அதை விற்கக் கூடாது. ஆகவே, கிராமப் பகுதியில் வாழ்கின்ற மக்களுக்கு வசதி செய்து கொடுக்க எல்லாவிதமான ஏற்பாடுகளையும் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, கவர்னர் அவர்களுடைய பிரசங்கத்தை முழுமனதுடன் ஆதரித்து என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். 5-40 p.m.

MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.